[24th September 1958

SRI N. K. PALANISAMI : நாகப்பட்டிணத்தில், அக்காரப் பேட்டை முதலிய 8 குப்பங்கள் இருக்கின்றன. அக்காரப் பேட்டைக்கு ஒரு பாப்லோ போட் கொடுக்கப்பட்டிருக்கிறது. மாதம் ரூபாய் 500 வருமானம் என்றும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும், 8 குப்பத்திற்கும், ஒரு போட்டுதான். ஆகவே, குப்பத்திற்கு இரண்டு வீதம் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஸ்டேட் முழுதுமே 42 போட்டுகள்தான் இருக்கின்றன. ஒவ்வொரு குப்பத்திற்கும் ஒன்று என்று கொடுத்துவிட்டால், மற்ற இடங்களின் கதி என்னாகும் ?

SRI A. VEDARATHNAM : நாகையில் விசைப் படகுகளை நடத்த பயிற்சி நடப்பதாகக் காண்கிறோம். அப்படி எத்தனை மாணவர்கள், பயிற்சி பெறுகிறார்கள், அவர்களுக்குப் பயிற்சிக்குக் கட்டணம் ஏதாவது உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவர்களில் இந்த வருடம் பத்துப் பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மீனவர் சமுதாயத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

*Home Science and Citizenship Training Centre*

* 490 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் எந்தெந்த இடங்களில் ஹோம் ஸைன்ஸ், குடிமைப் பயிற்சி நிலையங்கள் நடைபெறுகின்றன ?

(ஆ) இவை ஒவ்வொன்றுக்கும் ஆண்டுதோறும் ஆகும் நடைமுறைச் செலவு எவ்வளவு, நிரந்தரச் செலவு எவ்வளவு ?

(இ) இதில் எவ்வளவு பேருக்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றது ?

(ஈ) எந்த ஜில்லாக்களிலிருந்து இந்த பயிற்சியாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றார்கள் ?

(உ) இவர்களின் தகுதி என்ன ?

(ஊ) அவர்களைத் தேர்ந்தெடுப்பவர்கள் யார் ?

(எ) இந்தச் செலவில் மத்திய சர்க்கார் பங்கு எவ்வளவு ?

(ஏ) இந்தப் பயிற்சி ஸ்தாபனங்களை அதிகரிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) *to* (*h*) A statement [a] is laid on the table of the House.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஹோம் ஸைன்ஸில் என்ன வேலைகள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

MR. SPEAKER : தனிக் கேள்வி போடுங்கள். கேள்வி நேரத்தில் இதற்கெல்லாம் பதில் சொல்ல முடியுமா ?

*Maternity Home at Vedasandur*

* 491 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether a Maternity Home was constructed and finished on 1st April 1956 at Vedasandur, Madurai district ; and

(*b*) whether any doctor was posted for the Maternity Home?

THE HON SRI M. A. MANICKAVELU : (*a*) A Maternity Ward with four beds was constructed.

---

[a] Printed as Appendix III on page 666 infra.